Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



**ஜனநாயகம்**

ஜனநாயகம் பின்னோக்கிச் செல்லக் கூடாது. சிறந்த ஜனநாயகச் சூழ்நிலைவளர அனைவரும் உழைக்க வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**ஒப்புதல்**

அறிவுக்கும் அனுபவத்துக்கும் ஒத்துவருவதை மட்டுமே ஒப்புதல் செய்வது தான் சிறந்த மனிதனின் செயலாகும்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 23 - 5 - 1984 புதன் ✻✻ வெளியூர் 24 - 5 - 1984 வியாழன் இதழ்: 216

## இந்திரா காங்கிரஸ் கழக கூட்டணி தொடர வேண்டும்

### எம். பி. சுப்பிரமணியம் பேட்டி

**சென்னை, மே. 23- இந்திரா காங்கிரஸ் அனைத்திந்திய அண்ணா திமுகழக கூட்டணி நல்ல திருப்பத்தை உருவாக்கியுள்ளது. இந்த அணி தொடர வேண்டும் என்று எம். பி. சுப்பிரமணியம் கூறினார்.**

மேலவை எதிர்க்கட்சித் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் நிருபர்களிடம் கூறியதாவது:-

நடந்து முடிந்த இடைத் தேர்தல் முடிவுகள் இந்திராகாங்கிரஸ்- அனைத்திந்திய அண்ணா திமுகழகம் ஆகிய இரு கட்சிகள் கூட்டணியை பொதுமக்கள் பெரிதும் விரும்புகிறார்கள் என்ற உண்மையை எடுத்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

இரு கட்சிகளின் தலைமையிடம், மற்றும் அடித்தள தொண்டர்கள் ஆகிய அனைவரும் இதை உணர்ந்து செயல்படவேண்டும்.

எங்கள் வெற்றியில் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்திற்கு நிறைய பங்கு உண்டு.

இந்தக் கூட்டுதொடர வேண்டும் எதிர்காலத்தில் இந்தக் கூட்டு நல்ல பயனை விளைவிக்கும்

4 இடங்களில் இந்த அணி இரு இடங்களில் வெற்றி பெற்றுள்ளது.

ஏற்கனவே இருந்த இடத்தை இந்த அணி இழக்கவில்லை

ஆனால் தி.மு.க. தான் ஒருஇடத்தை இழந்திருக்கிறது. நமது அணி அதைக் கைப்பற்றி இருக்கிறது

இது ஒரு நல்ல திருப்பம் இவ்வாறு எம்.பி. சுப்பிரமணியம் எம். எல். சி கூறினார்.

அண்ணாநகரில் பல்லாயிரக் கணக்கான கள்ள ஓட்டுகள்! அதுவே தி. மு. க. தேர்வுபெற காரணம்

❖ இடைத்தேர்தலில் கழகமே அதிக ஓட்டு பெற்றுள்ளது

# இருந்த இடத்தை இழந்தது தி.மு.க.வே

## கருணாநிதியின் தில்லுமுல்லுகளை முறியடிக்கும் புரட்சித்தலைவர் எழுச்சி விளக்கம்



**சென்னை, மே. 23- தி. மு. க. வசம் இருந்த கஞ்சைத் தொகுதி தி. மு க.வை விட்டு கைமாறி கழகம்-காங்கிரஸ் கூட்டணிக்கு கிடைத்துள்ளது. எனவே இருந்த இடத்தை இழந்தது தி. மு. க.தான் என்று முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டார். கழகத்திற்கு முன்பைவிட கூடுதலாக வாக்குகள் கிடைத்துள்ளதையும் முதல்வர் புரட்சித்தலைவர் புள்ளிவிவரங்களுடன் எடுத்துக் காட்டினார்.**

சென்னை கோட்டையில் முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:

இத்தேர்தலில் கூடுமான வரையிலும் உரிய வகையில் தேர்தல செய்திகளை வெளியிட்டதற்காக என்னுடைய நன்றியைஎங்களகட்சியின் சார்பாகபத்திரிகைகளுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தத் தேர்தல் எங்களைப் பொறுத்தவரையில் மன நிறைவையும் மகிழ்ச்சியையும் தருகிறது. மக்களுடைய ஆதரவு பெருகி இருப்பதை கண்டு உண்மையை மக்கள் மறப்பதில்லை என்பதையும் உணர்ந்து மன அமைதியை பெறுகிறோம்

### கடமையை தொடர்வோம்

80 ம் ஆண்டில் மக்கள் எங்களுக்கு அளித்த உப்பிலியாபுரம் தொகுதியை மீண்டும்பல்லாயிரக்கணக்கான வாக்குகள் அதிகமாக அளித்ததன் வாயிலாக எங்கள் மேல் உள்ள நம்பிக்கையை உறுதிப்படுத்தி இருக்கிறார்கள் என்ற நன்றி உணர்வோடு அந்த மக்களுக்கு எங்களது கடமையை ஆற்றுவோம் என்று உறுதி அளிக்கிறோம்.

### நன்றி

எங்கள் கூட்டணிக்கு இல்லாத ஒரு இடத்தை தஞ்சை தொகுதியை அதிகவாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறச்செய்த தஞ்சை வாழ் மக்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

அண்ணாநகர் தொகுதியில் சென்ற 80ம்ஆண்டைவிட 5 ஆயிரத்துக்கும் அதிகமான வாக்குகளை அளித்த மக்களுக்கு என் கட்சியின் சார்பிலும் நான் என்றும் கடமைப்பட்டவன் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

எவ்வளவோ எதிர்ப்புகள் இருந்தும் சென்ற 80 ம் ஆண்டை விட 7 ஆயிரத்துக்கும்மேல் அதிகமான வாக்குகளை அதிகமாக அளித்த மயிலாடுதுறை வாழ் மக்களுக்கும் எங்களின் தொண்டு தொடரும் என்று உறுதி கூறுகிறேன்

நான்கு தொகுதிகளிலும் ஒரே நேரத்தில் தேர்தல் நடந்திருக்கிறது. அதை ஒட்டு மொத்தமாக கணக்கு பார்க்கவேண்டும்

### ஆதரவு அதிகரிப்பு

அப்படிப் பார்த்தால் 80-ல் நாங்கள் கூட்டு சேர்ந்திருந்தோமே அன்று பெற்ற வாக்குகளைவிட பதினோராயிரம் வாக்கு அதிகம் பெற்றிருக்கிறோம்.

தஞ்சையில் 77ம் ஆண்டு மொத்த வாக்காளர்கள் 126647 பேர் வாக்களித்தவர்கள் 80,0092 பேர். எங்களுக்கு 23622 வாக்குகளும் தி. மு. க.வுக்கு 33418 வாக்குகளும் இந்திரா காங்கிரசுக்கு 16584 வாக்குகளும் ஜனதாவுக்கு 6000வாக்குகளும் கிடைத்தன.

80-ம் ஆண்டு இந்திரா காங்கிரஸ் தி.மு க.வுடன் கூட்டு சேர்ந்திருந்தது. அப்போது மொத்தம் 128484 வாக்காளர்கள் அதில் 81 ஆயிரம் வாக்கு பதிவானது. காங்கிரசும் தி மு க வும் 40850 வாக்குபெற்றது. நெடுமாறனுக்கு நாங்கள் சீட்டு தந்திருந்தோம். அவருக்கு 39901 வாக்கு கிடைத்தது.

இப்போது அவர்களுடன் இருந்தவர்கள் எங்களோடு இருக்கிறார்கள். எங்களோடு இருந்தவர்கள் அவர்களோடு இருக்கிறார்கள்

84ம் ஆண்டு 1,0499 வாக்கு பதிவானது. அதில் ஏறத்தாழ 23 ஆயிரம் அதிகம் பதிவாகி இருக்கிறது.

80ம் ஆண்டு அவர்கள் (திமுக) 40 ஆயிரம்வாக்கு பெற்றவர்கள். இப்போது 47960 பெற்றிருக்கிறார்கள் 40 ஆயிரத்திலிருந்து 47 ஆயிரம் ஆகி இருக்கிறது

### 15 ஆயிரம் வாக்குகள் கூடுதல்

நாங்கள் 39 ஆயிரத்திலிருந்து 54 ஆயிரம் பெற்றிருக்கிறோம். இது பழைய கணக்குப்படி 15 ஆயிரம் அதிகம் கிடைத்திருக்கிறது. அவர்களைவிட 6370 ஓட்டு அதிகம் இப்போது.

புதிய வாக்காளர் அதிகம் இருக்கிறது என வாதத்திற்கு சொன்னால், அப்படியானால் புதிய வாக்காளர்கள் எங்களுக்கு ஆதாவாக இருக்கிறார்கள் என்று வாதத்திற்கு சொல்லாம்

மயிலாடுதுறையில் 80ம் ஆண்டு 37001 ஓட்டு எங்களுக்கு கிடைத்தது. 37671 ஓட்டு அவர்களுக்கு(தி.மு.க.)கிடைத்தது.

இப்போது (84ல்)44333 ஓட்டு எங்களுக்கும் 46113 ஓட்டு அவர்களுக்கும் கிடைத்திருக்கிறது

முன்பு (80ல்) 78 ஆயிரம் வாக்கு பதிவு ஆனது. இப்போது 93 ஆயிரம் பதிவாகியிருக்கிறது.

உப்பிலியாபுரம் தொகுதியில் 77ல இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றது 80ல் அனைத்திந்திய அண்ணா தி.மு கழகம் 43263 ஓட்டு பெற்று வெற்றி பெற்றது,

அப்போது பதிவானது 88643 ஓட்டு தி. மு க இந்திரா காங்கிரஸ் சேர்ந்து 40997 ஓட்டு பெற்றது 2266 ஓட்டில் கழகம் வெற்றிபெற்றது.

### 16 ஆயிரம் அதிகஓட்டு

இப்போது (84ல) 105 165 ஓட்டு பதிவானது அவர்கள்கூட்டணி 42744 ஓட்டு பெற்றது. எங்கள் கூட்டணி 59465 ஓட்டுப் பெற்றது.

16 ஆயிரம் ஓட்டு அதிகம் பெற்று வெற்றி பெற்றோம்.

88 ஆயிரத்திலிருந்து 105 ஆயிரம் பதிவு ஆகியது அதில் 13 ஆயிரம் ஓட்டு கூடுதலாக இருக்கிறது. எங்களுக்கு ஓட்டளித்தவர்கள் 14ஆயிரம் பேர் அதிகரித்திருக்கிறார்கள்.

கிட்டப்பா தி. மு. கவிலிருந்து இங்குவந்துசேர்ந்தார். அவர் 77, 80 ஆகிய ஆண்டுகளில்ஜெயித்தார்

77 ம் ஆண்டு8595ஓட்டு அதிகம்பெற்றார். 80 ல் 670 ஓட்டு அதிகம் பெற்றார். இப்போது தி.மு.க. 1786 ஓட்டு அதிகம் பெற்றிருக்கிறது.

மயிலாடுதுறை நகரை சுற்றியுள்ள கிராமங்களில் ஓட்டு எண்ணிய போது 2000 ஓட்டுக்கு மேல் நாங்கள் அதிகம் பெற்றிருந்தோம்.

நகரத்தில் அவர்களுக்கு அதிகமாக கிடைத்திருக்கிறது.

கிட்டப்பா ஜெயித்து எங்கள் கட்சிக்கு வந்தவர் எங்கள் கட்சியில் தேர்தலில் நிற்கவில்லல மக்களுக்கு அவர் இங்குவந்தது பிடிக்காமலிருக்கலாம்.

தமிழ்நாட்டு மக்கள் எங்கள் மீது முன்பைவிட அதிகம் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள என்பதை இந்தபுள்ளி விவரங்கள் காட்டுகிறது

அண்ணா நகரில் ஒரு துணை கமிஷனரும் அவரது மனைவியும் ஓட்டு போடச் சென்றாகள் அவர்களது ஓட்டை யாரோ போட்டுவிட்டார்கள.

இப்படி பல ஆயிரக்கணக்கான ஓட்டுகள் போடப்பட்டிருக்கின்றன.

அந்த ஓட்டு யாருக்கு போடப்பட்டிருக்கிறது என்பது பின்னால் வெளி வரும்.

### 16 ஆயிரம் கள்ள ஓட்டு

இதுபோன்றுபதினாறாயிரம் வாக்குகள் உண்மையான வாக்காளர்கள் போடமுடியாமல் திரும்பி விட்டார்கள்.

அந்த உண்மை வெளி வரும்போது மக்களுக்கு நிலைமை புரியும் என்று நம்புகிறேன்.

இனிமேல் நடக்க இருக்கின்ற தேர்தலில் அவரவர் வாக்குகளை அவரவர் போடும் உத்தரவாதத்துடன் தேர்தல நடந்தாக வேண்டும்.

அதற்காகத்தான் புகைப்படத்துடன் அடையாள அட்டை கொடுத்து தேர்தல் நடத்த இருக்கிறோம்.

மாநகராட்சி, நகராட்சி தேர்தல்கள் அக்டோபர்மாத முடிவில் கண்டிப்பாக நடத்த இருக்கிறோம.

இந்த சட்டமன்றத் தேர்தல்களை கூட முதலில் சொன்னது போல் நடத்தமாட்டோம் என்றார்கள்.

மாநகராட்சி நகராட்சி தேர்தலுக்கு வாக்காளர்களுக்கு 3 மாதத்திற்குள் அடையாள அட்டை கொடுக்கப்பட்டு விடும்.

இந்தஅடையாளஅட்டை தருவது நம்மை பொறுத்தவரை நமது முடிவு

நல்ல நியாயமான, ஜனநாயகத்தை காப்பாற்ற வேண்டும் என்றால் எல்லா தேர்தல்களுக்கும் இந்த அடையாள அட்டை அவசியம் என்று மத்திய தேர்தல் கமிஷனிடம் சொல்லலாம்

துணை கமிஷனர். ஐ. ஏ. எஸ். அதிகாரி ஓட்டுப் போடப்போனால அவர்கள் ஓட்டு ஏற்கனவே போடப்பட்டு

(2ம் பக்கம் பார்க்க)

## "கருணாநிதிக்கும் எனக்கும் போட்டி" என்று நான் கூறியபோது அவர் ஏற்காதது ஏன்?

## தியாகராயநகரில் திமுகவினர் நடத்திய வெறியாட்டம்

# பட்டாக்கத்தி பைப்புகளுடன் பயங்கர தாக்குதல்

### தி.மு.க. தொகுதி செயலாளர் உட்பட 6பேர் கைது

**சென்னை, மே 23- தியாகராயநகரில் திமுகவினர் வன்முறை வெறியாட்டம் ஆடியுள்ளனர். கழகத் தோழர்களை பட்டாக்கத்தி பைப்புகளால் தாக்கி காயப்படுத்தினர்.**

தாக்குதல் நடத்திய 6 தி.மு.க. வினர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

தியாகராயநகரில் கழகத் தோழர்கள் உப்பிலியாபுரம் வெற்றி விழாவைக் கொண்டாட நேற்று ஏற்பாடு செய்தனர்.

தி. நகர் பஸ் நிலையம் அருகே உள்ள பெரியார் திடல் அருகே கழகத் தோழர்கள் வெற்றி விழா ஏற்பாடுகளைச் செய்தனர்.

கழகக் கொடிகளைக் கட்டி மின்சார பல்புகளால் அலங்காரம் செய்யப்பட்ட பெரிய இரட்டை இலையைக் கட்ட ஏற்பாடு செய்துகொண்டிருந்தனர்.

### கொடிகள் கிழிப்பு

அப்போது திமுகவினர் அந்த இடத்திற்கு வந்து கழகத் தோழர்களின் செயல்களைத் தடுக்கமுற்பட்டனர்.

தி நகர் தொகுதி திமுக செயலாளர் ஜெயராமன், வட்ட செயலாளர் துரை, ஜெயராமனின் மகன் அன்பழகன் மற்றும் மூவர் பட்டாக்கத்தி, பைப்புகளுடன் வந்து கழகத் தோழர்களை வசைமாரி பொழிந்தபடி தாக்கினர்.

பல்புகளால் தயாரிக்கப்பட்டு இருந்த இரட்டை இலையை உடைத்து நொறுக்கினர்.

கழகக் கொடிகளையும் கிழித்து எறிந்தனர். கழகத் தோழர்களைத்தாக்கினர். இத்தாக்குதலில் கழகத் தோழர்கள் 6 பேர் காயமடைந்தனர்.

இந்ததாக்குதல்குறித்து 119-வது வட்ட கழக செயலாளர் சாமிநாதன் போலீசில் புகார் கொடுத்துள்ளார்.

ஜெயராமன், துரை அன்பழகன் உள்பட 6பேர்கள் கைது செய்யப்பட்டு பிறகு ஜாமீனில் விடுவிக்கப்பட்டனர்.

### முதல்வருக்கு அய்யாறு வாண்டையார் சந்தனமாலை

சென்னை, மே 23- தஞ்சை தொகுதியில் வெற்றி பெற்ற இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறு வாண்டையார் இன்று முதல்வர் புரட்சித் தலைவரை கோட்டையில் சந்தித்து சந்தன மாலை அணிவித்தார். பட்டு துண்டும் போர்த்தினார்.

அப்போது அமைச்சர்கள் எஸ்.டி.எஸ், திருநாவுக்கரசு மற்றும் காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி அய்யம்பேட்டை அஜீஸ ஆகியோரும்உடன் இருநதனர்.

# கருணாநிதி சொல்வது சுத்தப்பொய்: கழக அணிக்கே மக்கள் ஆதரவு அதிகம்

1980-ம் ஆண்டுக்குப் பிறகு தி.மு.க. அணிக்கு இப்போது மக்கள் ஆதரவு அதிகரித்து இருப்பதாக தி.மு.க. தலைவர் கருணாநிதி ஒரு கருத்தை ஒடவிட்டு இருக்கிறார்.

இது உண்மையா? மக்கள் ஆதரவு தி.மு.க. அணிக்குப் பெருகி இருக்கிறதா?

1980-க்குப் பிறகு இப்போது தி.மு.க 14 கட்சி கூட்டணியில் மஞ்சள் குளித்து மார் தட்டுகிறது.

அதுவும் இரு கம்யூனிஸ்ட் கட்சிகள் ஆதரவால் ஏதோ முதல் தடவையாக தலை தப்பி இருக்கிறார்.

இந்த இடைத் தேர்தல் முடிவு எதைக்காட்டுகிறது?

தி.மு.க வுக்கு சொந்தமாக தி.மு.க, கோட்டையாக இருந்த 3 இடங்களில் ஒன்றை இழந்து இருக்கிறது தி. மு. க.

தஞ்சை தொகுதியை பறிகொடுத்து இருக்கிறது தி. மு. க.

தி. மு. க.விடம் இருந்து கழக அணி அந்தத் தொகுதியைத் தட்டிப் பறித்துள்ளது.

இருந்த மூன்றில் ஒன்றை இழந்தவர்கள் எக்காள மிடுகின்றனர், ஏகடியம் பேசுகின்றனர்.

மக்கள் ஆதரவு 1980-க்குப் பிறகு இவர்களுக்கு அதிகரித்துள்ளதாம் பொய் மூட்டையை அவிழ்த்து விட்டுள்ளார் 20-ம் நூற்றாண்டு கோயபல்ஸ்.

கருணாநிதி கூற்றுப்படி அது சுத்தப் பொய், முழுப் பொய், அப்பட்டமானபொய். ஜமுக்காளத்தில் வடிகட்டிய பொய்.

ஆனால் உண்மை நிலவரம் திமுக அணியை விட கழக அணி அதிகம் வாக்குகளை இந்த தொகுதிகளில் பெற்று இருக்கிறது. இதுதான் உண்மை.

இந்த இடைத் தேர்தல் கழக அணிக்கு ஒரு புதிய இடம் வரவு தி மு க வுக்கு இருந்த இடத்தில் ஒன்று இழப்பு அப்படி இருந்தும் ஏதோ ஆதரவு என்று மார் தட்டுகிறார் கருணாநிதியார்.

இதோ ஒரு புள்ளி விவரம்:-

1980 ஆண்டு இந்த 4 தொகுதிகளில் கழக அணி, தி.மு.க. அணி பெற்ற ஒட்டு விவரம் வருமாறு:-

| | கழக அணி | திமுக அணி |
|---|---|---|
| அண்ணா நகர் | 50,591 | 51,290 |
| மயிலாடுதுறை | 37,001 | 37,671 |
| தஞ்சை | 39,901 | 40,880 |
| உப்பிலியாபுரம் | 43,263 | 40997 |
| மொத்தம் | 17,0756 | 170838 |

இந்தக்கணக்குப்படி 1980ம் ஆண்டு தேர்தலில் கழக அணியைவிட திமுக அணி 82 வாக்குகள் கூடுதலாகப் பெற்று இருந்தது.

இப்போது நடந்த இடைத்தேர்தல் வாக்கு விவரம்:

| | கழக அணி | திமுக அணி |
|---|---|---|
| உப்பிலியாபுரம் | 59465 | 42744 |
| தஞ்சை | 54180 | 47910 |
| அண்ணா நகர் | 55970 | 65341 |
| மயிலாடுதுறை | 44333 | 46113 |
| மொத்தம் | 21,3948 | 20,2108 |

இதில் கழக அணி 11'840 வாக்குகள் கூடுதலாகப் பெற்று இருக்கிறது.

இப்போது கருணாநிதியார் சொல்லட்டும் யாருக்கு மக்கள் ஆதரவு அதிகரித்து இருக்கிறது.

கருணாநிதி கண்ணை மூடி ஒரு கணக்கை சொன்னால் பூலோகம் இருண்டு விடாது.

உண்மையை உறங்க வைத்து பொய்க்கு மகுடாபிஷேகம் செய்வதில் மன்னர் கருணாநிதி. அது அவருக்கு கை வந்த கலை.

கருணாநிதி சொல்லும் கணக்கு பொய் - பொய் முழுப்பொய்.

மக்கள் ஆதரவு அதிகரித்திருப்பதுகழகஅணிக்கே இருந்ததை இழந்தவர் இழப்பை மறைக்க ஏதேதோ பேசுகிறார், பேசட்டும் பேசட்டும் மக்கள் இதற்கும்பதில் தருவார்கள்?

---

## எதிரொலி ஏட்டின்

# பொய்ச் செய்தி: நடிகர் கண்ணன் கடும் கண்டனம்

சென்னை, மே 23- கருணாநிதியின் எடுபிடி ஏடான எதிரொலி "தான் கழகத்தில் இருந்து விலகிவிட்டதாக" மோசடி செய்தி வெளியிட்டுள்ளதாகவும். பொய் செய்தி வெளியிட்டவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும் எனவும் நடிகர் கே கண்ணன் தெரிவித்துள்ளார்.

நடிகர் கே. கண்ணன் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:

நடந்து முடிந்த இடைதேர்தலில் கழகத்திற்காக கடந்த 14, 15, 16 ஆகிய தேதிகளில் பிரச்சாரம் செய்தேன்.

அதன்பிறகு 17 18-ந் தேதி சிவகாசியில் நடந்த 'டர்னிங்பாயிண்ட்' என்ற நாடகத்திலும், 19 ஆரணியிலும், 20, சேலத்திலும், நடைபெற்ற நாடகங்களிலும் பங்கேற்றேன்.

உண்மை இவ்வாறு இருக்க, நான் கழகத்தில் இருந்து விலகிவிட்டதாக வேண்டுமென்றே கருணாநிதியின் எடுபிடி ஏடான எதிரொலி பொய் செய்தி வெளியிட்டுள்ளது.

நான் ஊரில் இல்லாத நேரத்தில எனதுலெட்டர் பேடை எப்படியோ திருடி அண்ணாவின் லட்சியவழியில் செயல்படும் எனது தெய்வம் புரட்சித் தலைவர் மீது புகார் கூறும் வகையில் ஓர் அறிக்கையை யாரோ சிலர் கபடிகள் விஷமத்தனமாக எழுதி என பெயரில் வெளியிட்டுள்ளனர்.

## மோசடி செய்தி

உப்பிலியாபுரத்தில் நான் கழக தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்ததை அனைவரும் அறிவார்கள்.

உப்பிலியாபுரத்தில், என்னோடு, ஆவடி சிவா, எஸ். சுப்பிரமணியன், ராமகிருஷ்ணன், ஜே. கோபி, டி. அசோகன், ராஜேந்திரன் போன்ற கழகத் தோழர்கள் உடன் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டதும் அனைவருக்கும் தெரியும்

உண்மை இவ்வாறு இருக்க நான் கழகத்தில் இருந்து விலகிவிட்டதாக ஓர் மோசடி அறிக்கை வெளியிட்டுளளது அநாகரிக அரசியல் நடத்தும்சிலரை அம்பலப்படுத்தியுள்ளது இவ்வாறு மோசடிச்செய்தி வெளியிட்டுள்ளது மிகவும் கண்டிக்கத்தக்கது ஆகும்.

என் பெயரில் மோசடியாக செய்தி எழுதி அனுப்பியோர், மற்றும் பொய்ச்செய்தியை வெளியிட்டோர் ஆகியவர்கள மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்க உள்ளேன் என்பதைக தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் என்றும் போல் முதல்வர் புரட்சித் தலைவர் காட்டும் வழியில் அனைத்திந்திய அண்ணா தி.மு கழகத்தின் தொண்டனாக பணியாற்றுவேன் என்பதை உறுதியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு கண்ணன் தன் அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

---

# அணு சோதனையை நிறுத்த வல்லரசுகளுக்கு பிரதமர் வேண்டுகோள்

புதுடெல்லி, மே 23. அணு சோதனைகளை நிறுத்துமாறு வல்லரசுகளுக்கு பிரதமர் இந்திராவும், மற்றும் 5 நாடுகளின் தலைவர்களும் கூட்டாக வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

பிரதமர் இந்திராகாந்தி தான்சானியா அதிபர் நியரேரே, ஸ்வீடன் பிரதமர் ஓலாப்பால்மே, கிரேக்க பிரதமர் ஆண்ட்ருஸ் பாபன், மெக்சிகோ அதிபர் மிகெல்-டி லா, அர்ஜன்டைனா அதிபர்ரால் அல்போன்சின் ஆகியோர் கூட்டாக விடுத்துள்ள ஓர் வேண்டுகோளில் தெரிவித்திருப்பதாவது:-

மிகவும் நவீன அணு ஆயுதங்களை மேலும் சேர்ந்து ஈடுபடுத்துவது உலகை நாசப்பாதைக்கு இட்டுச் செல்லுவது ஆகும்

ஆகவே, அணு ஆயுதங்களை பயன்படுத்துவதையும், அணு சோதனைகளில் ஈடுபடுவதையும் நிறுத்துமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்

இவ்வாறு அந்தவேண்டுகோளில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அமெரிக்கா, ரஷ்யா சீனா, இங்கிலாந்து பிரான்ஸ் ஆகிய வல்லரசுகளுக்கு இந்த வேண்டுகோள் விடுவிக்கப்பட்டுள்ளது.

---

# புரட்சிதலைவர் விளக்கம்

(முதற் பக்கத் தொடர்ச்சி)

விட்டது என்றால் என்ன அர்த்தம்?

## இறந்தவர் ஓட்டு

அண்ணா நகரில் ஒரு ஓட்டுச் சாவடிக்குபக்கத்து வீட்டில் உள்ளது ஒரு முஸ்லிம் குடும்பம் அந்த குடும்பத்தில் ஒருவர் இறந்து விட்டார். அவரது ஓட்டை போட்டு இருக்கிறார்கள் இது எப்படி ஜனநாயகமாகும்? யாருக்கு வெற்றியாக இருந்தாலும் சரி.

ஒரு அதிகாரிவட இந்தியாவைச்சேர்ந்தவர் அவர் மனைவிபோட முடிந்தது. அவர்போட முடியவில்லை

காரில் கத்தி அரிவாள் போன்றவை வைத்திருந்தால் வன்முறையைச் செய்தால் அது எப்படி ஜனநாயகம் ஆகும்?

வண்டிகளில் கத்தி அரிவாள போன்றவற்றை பிடித்திருக்கிறார்கள். கல்யாண மண்டபத்தில் பிடித்ததாக தகவல் இல்லை.

இந்தராகாங்கிரஸ்கழகம் கூட்டணி நீடிக்குமா என்றால் எங்களுக்குள் உள்ள தொடர்பு அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்துகிறது.

முடிவு என்ன ஆகும் என்பதை இப்போது சொல்லமுடியாது. வரும் முன்பு எதுவும் சொல்ல முடியாது.

இந்த கூட்டணியை மக்கள் விரும்புகிறார்கள் என்று தெரிகிறது.

"கருணாநிதிக்கும் எனக்கும் தான் போட்டி" என்று எம். ஜி. ஆர். சொன்னாரே என்று ஒருவர் கேள்வி கேட்டதாக பத்திரிகைகளில் பார்த்தேன்.

கருணாநிதிக்கும், எனக்கும் தான் போட்டிஎன்று இப்போது சொல்லவில்லை. 72ம் ஆண்டு திண்டுக்கல் தேர்தலில் இருந்து சொல்லிக்கொண்டு வருகிறேன்.

200இடங்களில்போட்டியிட்டு 124 இடத்தில் வெற்றி பெற்றபோதும் சொன்னேன். 170 இடங்களில் போட்டியிட்டு 128 இடங்களில் வெற்றி பெற்றபோதும் சொன்னேன்.

தமிழக மக்கள் இந்த கருத்தை ஏற்றுக்கொண்டு எனக்குப்போட்ட மொத்த ஓட்டுக்களை எண்ணிப் பார்த்தால் எனக்குத்தான் மெஜாரிட்டி

எனக்கும் கருணாநிதிக்கும் தான் போட்டி என்று அண்ணாநகர் மயிலாடுதுறையில் மட்டும்சொல்லவில்லை, தஞ்சை, உப்பிலியாபுரத்திலும் சொன்னேன்.

## ஒப்புக் கொள்ளவில்லை

அவர் (கருணாநிதி) ஒப்புக் கொண்டிருந்தால் மக்கள் எனக் ஓட்டுப் போட்டிருப்பார்கள்.

திருச்செந்தூரிலும் பெரியகுளத்திலும் அதைச் சொன்னேன். கருணாநிதி ஒப்புக்கொண்டார். அவர் இங்கு ஒப்புக்கொண்டிருந்தால் நிச்சயமாக மக்கள் ஓட்டுப்போட்டிருக்கமாட்டார்கள்.

அப்படி சொன்னவர் மனோகரன் தான். கலைஞர் சொல்லவில்லை. சொல்லாததை அவர் சொன்னதாக கூறக் கூடாது

## மனோகரன் ஏமாற்றம்

மனோகரனுக்கு இருக்கும் ஏமாற்றம் எனக்குத் தான் தெரியும்.

இருந்த இடத்தை (தஞ்சையை) இழந்துவிட்டு எப்படி வெற்றி பெற்றதாக கூற முடியும்?

திண்டுக்கல் அவர்களிடம் இருந்தது அதை நாங்கள் பெற்றோம்.

பெரியகுளம் அவர்களிடம் இருந்தது நாங்கள் பெற்றோம்.

இப்போது மூன்று இடங்களில் இரண்டு தான் அவர்களுக்கு கிடைத்து இருக்கிறது. ஒரு இடம் எங்கள் கூட்டணிக்கு லாபம். உப்பிலியாபுரம் எங்கள் இடம், அது எங்களுக்கு கிடைத்திருக்கிறது.

மொத்த ஓட்டு கணக்கு பார்த்தால் 12 ஆயிரத்துக்கு மேல் நாங்கள் பெற்றிருக்கிறோம்.

உண்மை எது பொய் எதுஎன்பதைச் சொல்வது காலம் தான்.

கேள்வி: கள்ளப் ஓட்டுப் பற்றிபுகார் செய்வீர்களா?

முதல்வர்: ஓட்டளிக்கும் வாய்ப்பை இழந்தவர்கள் தான் அது பற்றி எதுவும் செய்ய வேண்டும் அவர்கள் என்ன செய்வார்கள் என்று நமக்கு என்ன தெரியும்?

பட்டதாரி தேர்தலில் இருந்து நாங்கள் தோல்வி அடைந்து கொண்டிருக்கிறோம் என்கிறார்கள்.

நாங்கள ஆட்சிக்கு வந்த பிறகு எங்கள் ஆட்கள் எப்போது பட்டதாரி தொகுதியில் போட்டியிட்டோம்.

சந்தோஷம், லீலாவதியை ஆதரித்தோம் வெற்றி பெற்றார்கள்.

சென்னையில் டாக்டர் அண்டே போட்டியிட்டார் வெற்றி பெற்றார்.

சுயேச்சை ஒருவரை ஆதரித்தோம் அவர் வெற்றிபெறவில்லை.

மற்ற 4 இடங்களிலும் நாங்கள் ஆதரித்தவர்கள் வெற்றி பெற்றார்கள் 4 புதியவர்கள் எங்களுக்கு கிடைத்திருக்கிறார்கள்.

ஏ.ஆர். தாமோதரன் தோற்றிருக்க முடியாது. இவர்கள் (தி.மு.க வலுக் கட்டாயமாக ஆதரித்ததால் தோற்றார் நாங்கள் ஆதரித்த ஜெயசந்திரன் வெற்றி பெற்றார்.

அண்ணா நகரில் ஓட்டு எண்ணிக்கையில் ஜெயித்திருக்கிறோம் என்றால் ஒப்புக்கொள்கிறோம். அது உண்மை.

கேள்வி: கள்ள ஓட்டு தவிர வேறு ஏதாவது புகார் உண்டா?

முதல்வர்: கள்ள ஓட்டு இல்லை என்ற பிறகு அதைப்பற்றி யோசிப்போம் 15 ஆயிரம், 16ஆயிரம் பேர் வாக்கு போடும் வாய்ப்பை இழந்து விட்டார்கள். என்னைப் பொறுத்தவரை கள்ளஓட்டு என்பதுதான் நம்பிக்கை என் மனதில் அப்படிதான் தோன்றுகிறது

கேள்வி: கள்ள ஓட்டுபற்றி கமிஷனிடம் மனுகொடுப்பீர்களா?

முதல்வர்:- என மனு என்னைப்பொறுத்தவரை மக்களிடம்தான்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார். ஜெப்பியார் சென்னை மாவட்ட கழக செயலாளர் பொறுப்பை ராஜினாமா செய்திருப்பது பற்றி முதல்வர் புரட்சித் தலைவரிடம் கேட்ட போது பொறுப்புள்ள ஒருவர் செய்ய வேண்டியதை செய்திருக்கிறார் என்றார்.

---

# கானல் நீரா கடலை அழிக்கும்?

உண்மைகளுக்குச் சில நேரங்களில் சோதனைகள்
வரலாம். சோதனைகள் என்பது நிரந்தரமல்ல,
பொய்மைகளுக்குச் சிலசமயம் வெற்றி கிடைக்கலாம்,
அந்த வெற்றிகளால் பொய்மைகள்
மணிமகுடம் சூடிக்கொள்ள முடியாது.
வானவில்களே வையகத்தை வளைத்துவிட
முடியாது — வைரிகளை வீழ்த்திவிட முடியாது.
கானல்நீரே கடல்நீரை கபளீகரம் செய்துவிட
முடியாது!
கருணாநிதி அவர்களே! நீர்க்குமிழிகளைக்
கண்டு நித்திலக் குவியல்களென்று
ஏமாந்துவிடாதீர்கள்!
கருணாநிதியாரே!
இனி உங்கள் சின்னத்தை மாற்றிக் கொள்ளும்!
ஒரு கையில் குண்டாந்தடியும்
இன்னொரு கையில் கள்ள ஒட்டும் ஏந்திக்கொள்ளும்!
எத்தனைக்காலம் இத்தகைய அரசியல் நிலைக்கும்?
அண்ணா சொன்னது நினைவிருக்கிறதா?
'வெற்றியைக் கண்டு வெறி கொள்ளவும் கூடாது
தோல்வியென்றால் துவண்டுவிடவும் ஆகாது'
என்ன வெற்றி கிடைத்துவிட்டது இத்தனை
ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டுப் பாடுகிறீர்!
அண்ணா நகரைப் பொறுத்தவரை இருந்த
இடத்தைத் 'தக்க' வைத்துக் கொண்டிருக்கிறீர்!
மயிலாடுதுறையிலும் அதே நிலைதானே?
ஏனிந்த எக்காளம்?
இன்னொன்றை ஏன் மறந்தீரய்யா
கோபாலபுரத்தாரே?
தஞ்சையில் இருந்ததை இழந்துவிட்டு
மானரோஷமில்லாமல் ஆட்டம் போடுகிறீரே?
கழகத்தின் வசமிருந்த எதை நீங்கள்
புதிதாகக் கைப்பற்றிவீட்டீர்கள்
நெஞ்சைத்தொட்டு பதில் சொல்லுங்கள்!
அண்ணாநகரில் நீங்கள் பெற்ற வெற்றி
யென்ன வெற்றிதானா?
கள்ள ஓட்டுப் போடுவதில் கைதேர்ந்த
கலைஞர்கள் நாங்கள் தான் என்பதை
மெய்ப்பித்துக் காட்டிவிட்டீர்கள்!
கொள்ளையடிப்பது கலை — கொலை செய்வது
கலை என்று வசனம் எழுதி வாக்குமூலம்
தந்த நீங்கள் கள்ள ஓட்டுப் போடுவதும்
ஒரு கைதேர்ந்த கலை என்பதை இந்த
இடைத்தேர்தலில் நிருபணப்படுத்தி யிருக்
கிறீர்கள்!
அதுமட்டுமா?—
காலித்தனம் செய்து — முதலமைச்சர் கார் மீதே
சோடா பாட்டில்களை அடித்தீர்கள்!
அனைத்திந்திய அண்ணா தி மு, கழக தோழர்கள் மீது
உங்கள் சைக்கிள் சங்கிலி படைகளை குண்டாந்
தடி கும்பலை ஏவிவிட்டீர்கள்!
அண்ணாநகர் தொகுதியில் அனைத்திந்திய அண்ணா
தி. மு. கழக தொண்டர்களை அடித்து நொறுக்
கினீர்கள்- ஆட்டோக் கவிழ்ந்து அக்குவேறு ஆணி
வேறாய் ஆக்கினீர்கள்.
அண்ணா படத்தையும் - முதல்வர் படத்தையும் கழகத்
தேர்தல் பணிமனைகளையும் தரைமட்டமாக்கி
னீர்கள்,
இத்தனையும் செய்துவிட்டு குண்டரிசத்தை கோலாகல
மாக அரங்கேற்றியது மட்டுமல்லாமல் போலீசார்
மீது வசைபாடினீர்கள்,
எத்தனை இழிமொழிகள்!
எத்தனை வசைபாடல்கள்!
எத்தனை தடியடி சோடாபாட்டில் தர்பார்கள்?
கழக பெண் பேச்சாளர்களைக்கூட இரக்க
மற்ற முறையில் அரக்கத்தனமாக நடுரோட்டில்
அடித்து அசிங்கப்படுத்தினீர்கள்.
இத்தனையும் போதாதென்று ஓட்டுக்கு நோட்டு
கொடுத்தீர்கள்.
அதுவும் போதாதென்றுஎங்கெங்கிருந்தோ
லாரிகளிலும்- ஆட்டோக்களிலும்
கொண்டு வந்து கள்ள ஒட்டுகளை
கச்சிதமாகப் போடவைத்தீர்கள்.
இப்படித்தானே நீங்கள் வெற்றிபெற்றீர்கள்?
இதுதான் அண்ணா வழியில் நீங்கள் பெற்ற
ஜனநாயக நெறிப்படியான வெற்றியா?
செய்த அராஜகங்களையெல்லாம் செய்து விட்டு
செய்த அக்ரமங்களையெல்லாம் செய்துவிட்டு
யோக்யர்களைப் போல பேசுவது - வீராதி
வீரர்களைப் போல வெத்து வேட்டுத்தனமான
ஆர்ப்பாட்டம் செய்வது சிறு பிள்ளைத்தனமாக
இருக்கிறது?
இன்னும் எத்தனை நாளைக்கு இந்த உங்கள்
அரசியல் எடுபடும்?
இந்த வெற்றிக்கே இத்தனை ஆர்ப்பாட்டம்
போடுவதைக் கண்டு நடுநிலையாளர்கள்
சிரிப்பாய் சிரிக்கிறார்கள்!
ஒரு இடைத் தேர்தலே ஆட்சி மாற்றத்தை
உருவாக்கக் கூடியதல்ல
ஏழாண்டு காலம் முதலமைச்சராக இருந்தவருக்கு
பல்லாண்டுக் காலம் ஒரு கட்சியில்
முக்கியப் பொறுப்புகளிலே இருந்தவருக்கு
இதுகூடப் புரியவில்லை,
ஓர் இடைத் தேர்தலே பெரும்பான்மை
பலம் பெற்ற ஆட்சிககு முடிவு கட்டி விடும்
வல்லமை பெற்றதா?
இல்லை என்று தெரிந்தும் பேசுகிறீர்கள்
என்றால் உங்கள சிந்தையை எந்த
அளவுக்கு பதவி வெறி ஆட்கொண்டிருக்கிறது
என்பதை நாடு புரிந்து கொண்டுவிட்டது!
உண்மைகளுக்குச் சில நேரங்களில் சோதனை
வரலாம்: சோதனைகளே நிரந்தரமல்ல!
பொய்மைகளுக்குச் சில நேரம் வெற்றி
கிடைக்கலாம் - அந்த வெற்றிகளால்
பொய்மைகள மணிமகுடம்
சூடிக்கொள்ள முடியாது!
வானவில்களே வையகத்தை வளைத்துவிட
முடியாது!
கானல் நீர் கடல் நீரைக் கபளீகரம்
செய்துவிட முடியாது!

- மணிமொழி

சேலம் விபத்து:

# இறந்தவர்கள் எண்ணிக்கை 20 ஆக உயர்வு

சேலம் மே. 23 பள்ளிக்கூட மாணவ-மாணவிகளை ஏற்றிச்சென்ற வேனுக்கு ஏற்பட்ட விபத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 20 ஆக உயர்ந்தது.

ஆலமரத்துப்பட்டி, மீனாட்சிவலசு, அரவக்குறிச்சி, மங்கலபுரம் ஆகிய ஊராட்சி ஒன்றிய பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவ மாணவிகள் ஒரு வேனில் சுற்றுலாப் பயணம் சென்றார்கள்.

கடந்த ஞாயிற்றுக்கிழமை (20ந்தேதி) அன்று ஓமலூர் அருகே இந்த வேனும் ஒரு பஸ்சும் பயங்கரமாக மோதிக்கொண்டன.

இந்த விபத்தில் 11 பேர் அதே இடத்தில் நசுங்கி செத்தனர். ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்காக எடுத்துச் செல்லும் வழியில் 3 பேர் செத்தனர். ஆஸ்பத்திரியில் 6 போ இறந்தனர்.

வேனை ஓட்டி வந்த டிரைவர் சாம்சன் மைக்கேல்ராஜ் (வயது 28) கிளீனர் கருப்பசாமி (வயது 20) ஆகியோரும் விபத்தில் உயிர் இழந்தனர்.

உரிமையாளர் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

சுற்றுலாப் பயணம் புறப்படுவதற்கு ஒருசில நிமிடங்களுக்கு முன்புதான் மதுரையிலிருந்து வேன் திரும்பியதாக ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருபவர்கள் தெரிவித்ததாக கலெக்டர் வரதராஜுலு கூறினார்.

டயர் திடீரென்று வெடித்ததாலேயே வேன் விபத்துக்குள்ளானது என்று கூறப்படும் தகவல் ஏதும் தனக்கு கிடைக்கவில்லை என்றும் கலெக்டர் வரதராஜுலு சொன்னார்.

விபத்தில் காயம் அடைந்த மாணவ மாணவிகளுக்கு சிகிச்சை அளிப்பதற்காக சென்னையிலிருந்து டாக்டர்கள் குழு சென்றது.

## லைசன்ஸ் இல்லை

மக்களை ஏற்றிச் செல்லும் வேன் மற்றும் லாரி உரிமையாளர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்குமாறு மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு கே. விஜயகுமாரை கேட்டிருப்பதாக கலெக்டர் ஆர். வரதராஜுலு நிருபர்களிடம் கூறினார்.

பயணிகளை ஏற்றிச் செல்ல விபத்துக்குள்ளான வேனுக்கு லைசென்ஸ் வழங்கப்படவில்லை. இதனை மீறி நடந்து கொண்டதற்காக வேன்

---

பயங்கர தீ விபத்து:

# ரூ. 6 லட்சம் சேதம்

கள்ளக்குறிச்சி, மே 23- சின்ன சேலம் பழைய பஸ் நிலையம் அருகே உள்ள மார்க்கெட்டில் நேற்று இரவு திடீரென்று தீ விபத்து ஏற்பட்டது. இதனால் அப்பகுதியில் உள்ள உரக்கடை உள்பட பல கடைகள் தீயில் எரிந்து நாசமாயின.

தகவல் கிடைத்ததும் தீயணைப்பு படையினர் விரைந்து சென்று 6 மணி நேரம் போராடி தீயை அணைத்தனர். இந்த விபத்தினால் சுமார் 6 லட்சம் ரூபாய் பொருட்கள் சேதமடைந்ததாக கூறப்படுகிறது.

இது குறித்து போலீசார் வழக்குபதிவு செய்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

## பாசனத்திற்கு வைகை அணைத் தண்ணீர்

மதுரை, மே. 23— வைகை அணையில் இருந்து தண்ணீர் வைகை பழைய ஆயக்கட்டு பகுதிகளுக்கு திறந்துவிடப்படுகிறது.

மானாமதுரை, சிவ

6-ம் பத்தி பார்க்க

---

அடுத்த மாதம்

# காவிரிப் படுகையில் எண்ணெய் தோண்டும் பணி

சென்னை. மே 23- நடப்பாண்டில் ஜூன் ஜூலை மாதங்களில் தமிழ்நாட்டின காவிரிப் படுகையில் எண்ணெய் எடுக்கும் வேலை துவக்கப்படுகிறது

எண்ணெய் மற்றும் இயற்கை வாயு கமிஷனின் தலைவர் கர்னல் எஸ்.பி. லாஹி இதுபற்றி கூறினார்

காவிரிப் படுகையில் கிடைக்கும் எண்ணெய் பற்றி நடத்தப்படும் ஆய்வு பணிகளை அவர் பார்த்தார். பின்னர் நிருபர்களிடம் அவர் கூறியதாவது:-

காவிரிப் படுகையில் கிடைக்கும் எண்ணெய் வர்த்தக ரீதியா கலாபகரமானதா என்று ஆய்வுகள் நடத்தப்படும் இறுதியான புள்ளி விவரங்களுக்காக காத்திராமல் காவிரிப் படுகையில் இப்போது கிடைக்கும் எண்ணெயை எடுத்துப் பயன் படுத்திக் கொள்வதென்று முடிவுக்கு வந்திருக்கிறோம் என்றும் அவர் கூறினார்.

இந்திய அரசுக்குச் சொந்தமான பொதுத் துறைநிறுவனங்களிலேயே மிக அதிகமூலதனத்துடன் இது நிறுவப்பட்டுள்ளது.

நாட்டின் எண்ணெய் தேவையை நிறைவு செய்தல்- எண்ணெய் வளத்தை எடுப்பதற்குத் தேவையான தொழில் நுட்பம் மற்றும் சாதனங்கள் முதலியவற்றில் சுயசார்பை அடைதல் ஆகிய நோக்கங்களை முன் வைத்து செயல்பட்டு வருவதாகவும் அவர் கூறினார்.

நாட்டில் 26 பிராந்தியங்களில் எண்ணெய் வள ஆராய்ச்சி நடைபெறுகிறதாகவும் அவர் கூறினார்

காவிரிப் படுகையில் தொடக்க நாட்களில் நாள் ஒன்றுக்கு 60 ஆயிரம் டன் கச்சா எண்ணை கிடைக்கும்.

ஏழாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் 1700 கோடி ரூபாய் இந்தியாவில் எண்ணை பெற ஆய்வுக்காக முதலீடு செய்யப்படும் என்றும் கர்னல் லாஹி சொன்னார்

---

காஷ்மீரில் ஹசீம்?

# போலீசார் தீவிர கண்காணிப்பு

ஸ்ரீநகர். மே 23- காஷ்மீர் தேசிய விடுதலைமுன்னணி என்ற அமைப்பின் அமைப்பாளர் என்று கூறப்படும் ஹசீம் குரோஷி காஷ்மீருக்குள் நுழைந்திருப்பதாக கூறப்படுகிறது.

இதையடுத்து மாநில அரசு போலீசாருக்கு உஷார் நிலையில் இருக்குமாறு உத்தரவிட்டுள்ளது

1971-ல் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தை கடத்திச் சென்றது இவர்தான் என்று கூறப்படுகிறது. பின்னர் அந்த விமானம் வெடி வைத்து தகர்க்கப்பட்டது தெரிந்ததே.

குரோஷியின் தம்பி, இக்பால் குரோஷி கடந்த சுதந்திர தினத்தன்று நடைபெற்ற வெடி விபத்து தொடர்பாக ஏற்கனவே கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளார்.

---

3-ம் பத்தி தொடர்ச்சி

கங்கை, இளையாங்குடி, பரமக்குடி தாலுகா ஆகிய வற்றுக்கு இந்த தண்ணீர் விடப்படுகிறது.

இம்மாதம் 23ம் தேதியில் இருந்து 31ம் தேதி வரை புதிய ஏற்பாடாக இந்த தண்ணீர் திறந்து விடப்படுகிறது என்று முகவை மாவட்ட ஆட்சித் தலைவர் குருமூர்த்தி தெரிவித்துள்ளார்.

---

பஞ்சாபில் தீவிரவாதிகள் வன்முறை:

# பஸ்சை கடத்தி 4 பயணிகள் சுட்டுக் கொலை

சண்டிகார், மே 23- தனிநாடு கோரும் சீக்கிய தீவிரவாதிகள் ஒரு பஸ்சை கடத்திச் சென்று 4 பயணிகளை சுட்டுக் கொன்றனர்.

பஞ்சாபில் தீவிரவாதிகளின் அட்டகாசம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

ஒன்றுமறியாத அப்பாவி குடிமக்களையும், போலீஸ் அதிகாரிகளையும். சுட்டுத்தள்ளுகிறார்கள் வீடுகளிலும் வங்கிகளிலும் கொள்ளை அடிக்கிறார்கள். அரசு அலுவலகங்களை தீயிட்டு கொளுத்துகிறார்கள்.

பெரோஸ்பூர் சென்று கொண்டிருந்த ஒருபஸ்சை தீவிரவாதிகள் 6 பேர் தாராப்பூர் கிராமத்திற்கு கடத்திச் சென்றனர்.

பஸ்சிலிருந்த பயணிகள் எல்லோரையும் கீழே இறங்கும்படி கட்டளை இட்டனர். நடுநடுங்கியவாறு பயணிகள் கீழே இறங்கினர்.

## வெடிகுண்டு வீச்சு

அவர்களில் 4 பேரை தீவிரவாதிகள் சுட்டுக் கொன்றனர் பின்னர் அவர்கள் தப்பிஓடிவிட்டனர்.

அமிர்தசரஸ் நகரில் மத்திய ரிசர்வ் போலீஸ் படையை சேர்ந்த லாரி மீது தீவிரவாதிகள் 2 வெடிகுண்டுகளை வீசினார்கள் வானிலேயே அக்குண்டுகள் வெடித்து விட்டதால் லாரியிலிருந்தவர்கள் உயிர் தப்பினார்கள்.

## 17 பேர் சாவு

சீனியர் சப்ஜட்ஜின் கோர்ட்டுக்கு தீ வைக்கப்பட்டது. நகரசபை அலுவலகத்திற்கும் தீயிடப்பட்டது. இந்த தீ விபத்தில் மரச்சாமான்களும், தஸ்தாவேஜுகளும் எரிந்து நாசமாயின.

பஞ்சாப் மாநிலத்தில் நேற்று முந்தின நாள் இரவிலிருந்து நடந்துள்ள தீவிரவாதிகளின் இந்த வன்முறைதாக்குதலில் மேலும் 17 பேர் உயிர் இழந்தனர். 20க்கும் மேற்பட்டவர்கள் காயம் அடைந்தனர்.

தடை செய்யப்பட்ட அகில இந்திய சீக்கிய மாணவர் சம்மேளனத்தைச் சேர்ந்த 7 தீவிரவாதிகள் ராஜஸ்தானில் கங்கா நகரில் கைது செய்யப்பட்டனர்.

---

தஞ்சையை இழந்த கருணாநிதி கட்சி:

# தி. மு. க. கோட்டையை கைப்பற்றி விட்டோம்

## ஜி. கே. மூப்பனார் பேட்டி

புதுடெல்லி, மே. 23- நீண்ட காலமாக தி. மு. க வசம் இருந்த தஞ்சை தொகுதியில் இ காங்கிரஸ் வெற்றி பெற்றது அரசியல் முக்கியத்துவம் பெற்ற நிகழ்ச்சி என்று இ. காங்கிரஸ் பொதுச் செயலாளர் மூப்பனார் குறிப்பிட்டார்.

புதுடெல்லியில் இந்திரா காங்கிரஸ் பொதுச் செயலாளர் கருப்பையா மூப்பனார் எம்.பி. நிருபர்களுக்கு பேட்டியளித்தார் பேட்டியின்போது அவர் கூறியதாவது:—

இந்திரா காங்கிரஸ் - அனைத்திந்திய அண்ணா தி. மு. க உறவை தமிழக மக்கள் ஆதரிக்கிறார்கள் என்பதை இந்த தேர்தல் எடுத்துக் காட்டுகிறது.

அனைத்திந்திய அண்ணா தி.மு.க. மாநிலக் கட்சியாக இருந்த போதிலும் தேசிய ஒருமைப்பாட்டில் நம்பிக்கைகொண்டுள்ளது.

தஞ்சை தொகுதியில் 1967 முதல் தி. மு. க. வெற்றி பெற்று வந்துள்ளது அங்கு இப்போது இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றது அரசியல் முக்கியத்துவம் பெற்ற நிகழ்ச்சியாகும்.

இவ்வாறு மூப்பனார் கூறினார்.

கேள்வி:- சமீபத்தில் 20 சட்டசபை தொகுதிகளில் நடைபெற்ற தேர்தலில் இ காங்கிரஸ் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறாமல் தோல்வி அடைந்தது ஏன்?

மூப்பனார்:- தோல்வி அடையவில்லை. இந்திரா காங்கிரஸ் இந்த தேர்தலில் நல்ல வெற்றி அடைந்துள்ளது.

கேள்வி: பொதுத்தேர்தல் வந்தால் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெறுமா?

மூப்பனார்: ஆம் பெரிய மெஜாரிட்டியுடன் வெற்றி பெற்று மீண்டும் ஆட்சிக்கு வரும்.

கேள்வி: உத்தரப் பிரதேச சட்டசபை தேர்தலில் ஒரு தொகுதியில் மேனகா கட்சியிடம் இந்திரா காங்கிரஸ் தோல்வி அடைந்துள்ளதே?

மூப்பனார்: அந்தகட்சி, வகுப்பு வாத உணர்வை பரப்பி ஓட்டு கேட்டதாக தகவல் வந்துள்ளது

இவ்வாறு மூப்பனார் கூறினார்.

---

கேரள சட்டசபை இடைத்தேர்தல்

# மூன்று தொகுதிகளிலும் ஆளும் கூட்டணி வெற்றி

திருவனந்தபுரம், மே 23 கேரளமாநிலத்தில் நடந்த சட்டசபை இடைத் தேர்தலில் ஆளும் கூட்டணி 3 தொகுதிகளிலும் வெற்றி பெற்றது

பரூர் தொகுதியில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் ஏ. சி ஜோஸ் (முன்னாள் சபாநாயகர்) 1500 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றிபெற்றார்.

புனலூர் தொகுதியில் கேரள காங்கிரஸ் (ஜே வேட்பாளர் வி சுரேந்திரன் பிள்ளை 1500 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி அடைந்தார்

மஞ்சேரி தொகுதியில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் வேட்பாளர் இவுச்கிரிச்சல் 21 ஆயிரத்து 809 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றிபெற்றார்.

---

# கல்லூரிகளில் ராக்கிங்கை தடுக்க அரசு உத்தரவு

சென்னை. மே, 23- கல்லூரிகளில் ராக்கிங் முறையைத் தடுக்கவும், ராக்கிங்கில் ஈடுபடும் மாணவர்களை கண்டுபிடித்து தண்டிக்கவுமான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு எல்லா கல்லூரி முதல்வர்களுக்கும அரசு அறிவுரை வழங்கியுளைது.

கலைக்கல்லூரிகள், பொறியியல் கல்லூரிகள், மருத்துவக்கல்லூரிகள், வேளாண்மைக் கல்லூரிகள், சட்டக் கல்லூரிகள் உள்ளிட்ட அனைத்துக் கல்லூரிகளிலும் பழைய மாணவர்கள் புதிதாக கல்லூரியில் சேரும் மாணவர்களை கிண்டல் செய்யும் வகையில் ராக்கிங் நடவடிக்கையில் ஈடுபடுகின்றனர்.

கடந்த சில ஆண்டுகளுக்கு முன் இந்தக் கொடுமை அதிகமாகவே இருந்தது.

ராக்கிங் முறையால ஒரு மாணவர் தற்கொலை செய்துகொண்ட நிகழ்ச்சி கூட நடந்தது. இந்த முறையை ஒழிக்க அரசு நடவடிக்கை எடுத்ததன் விளைவாக தற்போது இந்த முறை குறைந்துள்ளது.

இந்த முறையை அடியோடு ஒழிக்கும் வகையில் ராக்கிங்கில் ஈடுபடும் மாணவர்களைக் கண்டுபிடித்து கடும்நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு சம்பந்தப்பட்ட அனைத்துக்கல்லூரி முதல்வர்களையும் அரசு கேட்டுக்கொண்டுள்ளது.

---

# சேலம் அருகே மண் சரிந்து இருவர் சாவு

சேலம், மே 23— சேலத்தில் இருந்து 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள தேக்கம் பட்டியில் ஒரு கிணற்றை ஆழப்படுத்தும் பணியில் 2 விவசாயத்தொழிலாளர்கள் ஈடுபட்டிருந்தனர்.

அப்பொழுது திடீரென மண் சரிந்தது. இதில் அந்த 2 தொழிலாளர்களும், மண்ணில் புதையுண்டு இறந்தனர்

இந்த விபத்து குறித்து போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

---

# 20 அம்ச திட்டத்தை சிறப்பாக செயல் படுத்தும் தமிழகம்

## மைய அமைச்சர் விஜயபாஸ்கர ரெட்டி மனந்திறந்த பாராட்டு

பாண்டிச்சேரி, மே 23- பிரதமரின் இருபது அம்சதிட்டத்தை செயல்படுத்துவதில் தமிழகம் சிறப்பிடம் வகிக்கிறதென்று மைய அமைச்சர் விஜயபாஸ்கர ரெட்டி மனந்திறந்து பாராட்டியுள்ளார்.

மத்திய கப்பல் போக்குவரத்து அமைச்சர் விஜயபாஸ்கர ரெட்டி பாண்டிச்சேரியில் துறைமுகம் மற்றும் மீன்பிடித் துறைவசதிக்கான 15கோடி திட்டத்திற்கு அடிக்கல் நாட்டினார். விழாவில் விஜயபாஸ்கரரெட்டி பேசுகையில் ரோடியர்மில்லை திறக்க தன்னால் முடிந்த அனைத்து உதவிகளையும் செய்யத் தயாராக உள்ளதாகவும் கூறினார்,

பின்னர் நிருபர்களிடம் பேசுகையில் அமைச்சர் விஜயபாஸ்கர ரெட்டி தமிழகம் பிரதமரின் 20 அம்சதிட்டத்தை சிறப்பாக செயல்படுத்தி வருகிறது என்று பாராட்டு தெரிவித்தார் மேலும் அவர் கூறுகையில் மாநில அரசின் பொறுப்பிலுள்ள சிறிய துறைமுகங்களை மைய அரசே ஏற்கவேண்டுமென்ற கோரிக்கை மாநில அரசுகளிடமிருந்து வந்துள்ளது. இதுபற்றி மைய அரசு எந்த முடிவும் இதுவரை எடுக்கவில்லை என்றும கூறினார்.

---

அண்ணாவில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்

---

பம்பாயிலுள்ள திரைப்பட சங்கம தயாரிக்கும

# குழந்தைகள்பற்றிய திரைப்படங்களுக்கு தமிழகஅரசு உதவி

சென்னை மே 3 குழந்தைகள் திரைப் படங்களுக்கு உதவி அளிக்கும் திட்டத்தின் கீழ் பம்பாயிலுள்ள குழந்தைகள் திரைப்பட சங்கம் தயாரிக்கும் குழந்தைகளுக்கான திரைப்படமும சேர்த்துகொள்ளப்படுகிறது

இது குறித்து அரசு வெளியிட்டுள்ளபத்திரிகை குறிப்பு வருமாறு:-

தமிழ்நாட்டில் தயாரிக்கும் திரைப்படங்களுக்கு உதவித் தொகை அளிக்கும் திட்டத்தில் பம்பாயிலுள்ள குழந்தைகள் திரைப்படச் சங்கம் தயாரிக்கும் குழந்தைகளுக்கான திரைப்படமும் சேர்த்துக்கொள்ளப்படும்.

இத்திட்டத்தில் சேர்த்துக் கொள்ள இச்சங்கம் தயாரிக்கும் படங்களின் கருத்திற்கும் கதைக்கும் திரைப்படம் தயாரிக்கும் முன்பாக தமிழக அரசின் ஆலோசனையைப் பெறவேண்டும்.

தமிழக அரசின் உதவித் தொகைக்காக இச்சங்கம் ஒவ்வொரு வருடமும் குறிப்பிடப்பட்ட விண்ணப்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தேதிக்கு முன் விண்ணப்பிக்க வேண்டும்.

இச்சங்கம் தயாரிக்கும் குழந்தைகளுக்கான திரைப்படத்தில் பங்கு பெறும் குழந்தைகளும் சிறந்த நடிகர்களுக்கான பரிசுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவர்

மேலும் இந்த சங்கம் தயாரிக்கும் குழந்தைகளுக்கான திரைப்படங்கள் சிறந்த திரைப்படங்களுக்கான பரிசுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படும்

இவ்வாறு அரசு குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

---

# சென்னை-திருச்சிக்கு அதிக பஸ் வசதி

சென்னை, மே 23— சென்னையிலிருந்து திருச்சிக்கு ஒருமணிநேரத்திற்கு ஒரு எக்ஸ்பிரஸ் பஸ் வீதம் தினமும் 24 திருவள்ளுவர் போக்குவரத்துக் கழக பஸ்கள் விடப்படுகின்றன.

மற்ற வாகனங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் திருவள்ளுவர் பஸ்களில் கட்டணம குறைவு.

திருச்சி செல்ல ரயில் கட்டணம் 35 ரூபாய் தனியார் பஸ்ஸில 40 ரூபாய் வசூலிக்கப்படுகிறது. அரசு போக்குவரத்துக் கழக பஸ்களில் 24 ரூபாய் 40 காசு ஆகிறது

இவ்வாறு திருவள்ளுவர் போக்குவரத்து கழக நிர்வாக ஆயக்குனர் தெரிவித்துள்ளார்.

---

# மராட்டிய கலவரம்: சாவு எண்ணிக்கை 132 ஆக உயர்வு

பம்பாய் மே 23 மராட்டிய மாநிலத்தில் பல இடங்களில கலவரம் பரவுகிறது இதுவரை இக்கலவரத்தில் 132 போ இறந்தனர்.

மராட்டிய மாநிலத்தில் பிவாண்டியில் ஏற்பட்ட வகுப்புக் கலவரம் தானே பம்பாய் பகுதிகளுக்கு வேகமாகப் பரவியது.

கடந்த ஒரு வார காலமாக நடந்துவரும் இக் கலவரத்தில் இதுவரை 132 பேர் இறந்துவிட்டனர்.

ரோடில் திரிந்து கொண்டிருக்கும் வன்முறைக் கும்பல்கள் வழிப்போக்கர்களைத் தடுத்து நிறுத்தி அவர்களின் பெயரைக் கேட்டு கத்தியால் குத்துவதாக போலீசார் தெரிவித்தனர்

தெற்கு பம்பாய்ல் ஜன நெரிசல் மிகுந்த முகமதலி சாலையில் ஓடும் லாரியிலிருந்து வீசப்பட்ட வெடிகுண்டு வெடித்ததில் 2 போ காயம அடைந்தனர்.

பெண்டிபஜார் பகுதியில் கத்திக்குத்து காயம் அடைந்தவர்கள் கை வண்டிகளில் ஆஸ்பத்திரிக்கு கொண்டு வரப்பட்டனர்.

## ராணுவம்

பிவாண்டி, பம்பாய், தானே, கல்யாண் ஆகிய இடங்களில் நடந்து வரும் கலவரத்தில இதுவரை 3 ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டனர் 620 பேர் கலவரத்தில் காயம் அடைந்தவர்கள் என்று அரசு வட்டாரங்கள் கூறின.

பம்பாயில் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிக்கையில் பணிபுரியும் பல் ஷிராம் பாண்டுரங் சேவாலே வயது 21) என்பவர் கொலை செய்யப்பட்டார்,

பிவாண்டி, தானே கோவண்டி, ஜோகேஸ்வரி பகுதிகளில் ராணுவம் ரோந்து சுற்றி வருகிறது.

# அவமானச் சின்னமே! மனப்பால் குடிக்காதே!!

கோதுமை பேர ஊழல் - பூச்சி மருந்து ஊழல் - சர்க்கரை பேரக் கொள்ளை.

—இப்படி நானாவகைகளிலும் கோடி, கோடியாகத் தன் குடும்பத்திற்குச் சுருட்டி வைத்துக்கொண்டு-

—அந்தப் பல கோடிகளில் சில கோடியை அவிழ்த்து விட்டுத் தேர்தல் நடத்திய ஊழல் மன்னன் கருணாநிதி-

—தான் செலவிட்ட பணத்துக்கு உரிய பங்காக ஓட்டுக் கிடைக்கவில்லை என்பதால் ஓலமிட்டிருக்கிறார்]

கருணாநிதி கண்டுபிடித்த ஆயுதமான சைக்கிள் ஜெயின்கள், கத்தி, அரிவாளுடன் அடியாட்களை அனுப்பி 4 தொகுதிகளிலும் சண்டித்தனம் நடத்தினார் கருணாநிதி.

"கழகத் தோழர்கள் எதிர்க்கட்சியாக இருந்த போதும் தாக்கப்பட்டார்கள். இப்போது ஆளும்கட்சியாக இருக்கும் போதும் தாக்கப்படுகிறார்களே" என்று புரட்சித்தலைவர் வேதனைப்பட்டார்.

கருணாநிதியின் அடியாட்கள் அவ்வளவு காலித் தனங்களைக் கட்டவிழ்த்து விட்டனர்.

தி. மு. க. வுக்கு ஓட்டுப் போடாவிட்டால் குடிசைகளைத் தீயிட்டுக் கொளுத்துவோம் என்ற பகிரங்க மிரட்டல் படலத்தில் ஈடுபட்டது தி. மு. க குண்டர் அணி!

இத்தனைக்கும் பிறகு கழக அணி இரண்டுஇடங்களில் வெற்றிபெற்றுள்ளது

உப்பிலியாபுரத்தில் மாபெரும் வெற்றி!

தஞ்சையில் நம் அணி அமோகவெற்றி!

லஞ்சக்கோடீஸ்வரர் கருணாநிதி தனது கோட்டை என்று வர்ணித்து வந்த தஞ்சை மக்கள் நமது முற்போக்கு அணியை ஆதரித்து கருணாநிதிக்குப் பட்டை நாமம் சாற்றி அனுப்பி விட்டார்கள்!

அதனால் வந்த ஆத்திரத்தில் அயோக்கியத்தனம்-காலித்தனம்- இவற்றின் மொத்த உருவமாய்-அவமானச் சின்னமாய்த்திகழும் கருணாநிதி "கயமையின் சின்னம்" என்று எழுத முற்பட்டிருக்கிறார்!

ஊர்ப்பணத்தை சுருட்டிக் கொழுத்து உத்தமன் வேடம் கட்டி ஆடும் இந்த அயோக்கிய சிகாமணியின் முகமூடியை அவரது சொந்த மாவட்டமான தஞ்சை மக்கள் கிழித்தெறிந்து விட்டார்கள்!

கழகம் இருந்ததை இழக்கவில்லை! புரட்சித்தலைவர் தான் தமிழகத்தை ஆளவேண்டும். கருணாநிதி என்பவர் கேடிப்புள்ளிதான் என்கிற மாதிரி அவரது தஞ்சைக் கோட்டை நல்லபாடம் கற்பித்திருக்கிறது,

நமது அணிஇல்லாததைப்பெற்றிருக்கிறது. கயமை அரசியல்வாதி இருந்ததை இழந்திருக்கிறார்!

ஊரை அடித்து உலையில் போட்டு நடமாடித்திரியும் உம்மையா தமிழகம் ஏற்கும்?

பகற்கனவு காணாதீர்! எச்சரிக்கிறோம்!!

---

ஆயிரம் அடி ஆழமுள்ள

## பள்ளத்தாக்கில் பஸ் விழுந்து 8 பேர் மரணம்

### 37 பேர் படுகாயம்

இட்டாநகர், மே 23- ஆயிரம் அடி ஆழம் உள்ள 'கிடுகிடு' பள்ளத்தில் பஸ் உருண்டது. இந்த விபத்தில் 8பேர் நசுங்கிசெத்தனர். மற்றும் 37 பேர் படுகாயம் அடைந்தனர்.

அருணாசலப் பிரதேசத்தில் சுபன்ஸ்ரி மாவட்டத்தில் தபோரிஜோ என்ற மலைப்பிரதேசம் உள்ளது இங்கு செல்லவேண்டும் என்றால் வளைந்து வளைந்து செல்லும் மலைப் பாதையில்தான் போகவேண்டும்.

சம்பவதினத்தன்று தபோரிஜோவுக்கு 45 பயணிகளை ஏற்றிக்கொண்டு ஒருபஸ் சென்று கொண்டிருந்தது.

ஒரு வளைவில் திடீரென்று ஏற்பட்ட சறுக்குதலால பஸ் 1000 அடி ஆழமுள்ள 'கிடுகிடு' பள்ளத்தில் உருண்டு விழுந்தது,

இந்த விபத்தில் 8 பேர் அதே இடத்தில் நசுங்கி செத்தனர்.

மற்றும் 37 பேர் படுகாயம் அடைந்தனர். அவர்கள் சிகிச்சைக்காக தபோரிஜோ ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர்.

விபத்து நடந்த இடத்திற்கு மீட்புக்குழுவினர் விரைந்தனர்.

---

## எவரெஸ்ட் மலையை சுத்தப்படுத்தும் நேபாள அரசு

காட்மாண்டு, மே 23- எவரெஸ்ட் மலையை சுற்றிலும்சுத்தப் படுத்தும் பணியை நேபாள அரசு மேற்கொண்டுள்ளது.

மலையேற்றத்தில் சாதனைபுரிய விரும்பும் பலநாட்டு மலையேறும் கோஷ்டியினர் எவரெஸ்டு மலை சிகரத்தில் ஏறி தங்கள் சாதனையை உலகுக்கு காட்டுகின்றனர்.

அவ்வாறு வரும் மலையேறும் கோஷ்டியினர் தங்களிடம் மிச்சம் மீதியான பொருட்களை அடிவாரத்தில் விட்டுவிட்டு சென்று விடுகின்றனர்.

இதனால் ஏற்படும் அசுத்தத்தை போக்குவதில் நேபாளஅரசு ஈடுபட்டுள்ளது.

எல்லா அசுத்தப் பொருட்களையும் அடிவாரத்துக்கு கீழே 400 மீட்டர் ஆழத்தில் புதைத்துவிடவும் நடவடிக்கை எடுககப்பட்டுள்ளது.

---

### ஏல விளம்பரம்

(1) எம்.சாகர்மல் ஜெயின் 99, L.B.ரோடுசென்னை-20 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் பிப்ரவரி "83 முடிய) ஏலத்தேதி 7-6-84 அன்று மதியம் 2 மணிக்கும், (2) B. தேவராஜ் ஜெயின், 66, பாளையம்மன் கோயில் தெரு, சென்னை-49 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் பிப்ரவரி 83 முடிய) ஏலத் தேதி 7-6-84 அன்று காலை 11 மணிக்கும், 3. எஸ். பெருலால்ஜெயின், 23, தாணாத்தெரு, சென்னை-7, (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் பிப்ரவரி 83முடிய) ஏலத்தேதி 8-6-84 அன்று காலை 11 மணிக்கும், 4. எம். சம்பத்ராஜ் கோத்தாரி, 1-2 கல்மண்டபம் ரோடு, ராயபுரம் சென்னை-13(31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் ஜனவரி 83 முடிய) ஏலத் தேதி 8-6-84 அன்று மதியம் 2 மணிக்கும், 5) L. ரங்கராஜ்ஜெயின், 34, கப்பராய முதல் தெரு, சென்னை-12, (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் மார்ச் 83 முடிய) ஏலத்தேதி 8-6-84 அன்று மதியம் 3 மணிக்கும்- மேற்படியார் கடைகளில் அடகுவைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரம்சந்த். ஜெயின், 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை 12 ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி ஏலம் போடுவார்.

### ஏல விளம்பரம்

1 B அன்ஸ்ராஜ் ஜெயின் 81 L B. ரோடு. சென்னை-20 (31-12-79க்கு முன்பும்) ஏலத்தேதி 1-6-84 அன்று காலை 11-மணிக்கும், 2. சேத்தியா & கோ 81 L. B. ரோடு சென்னை-20 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் நவம்பர் 1982 முடிய) ஏலத் தேதி 4-6-84 அன்று காலை 11-மணிக்கும், 3. G. ஜவர்லால்ஜெயின் (31-12-79க்கு முன்பும் 24 8-82முதல் பிப்ரவரி 1983 முடிய) ஏலத் தேதி 5-6-84 அன்றுகாலை 11 மணிக்கும் (4) கோதம்& கோ, 4 P.A கோயில்தெரு, சென்னை-49 (31-12-79க்கு முன்பும், 24 8 82 முதல் பிப்ரவரி 83 முடிய) ஏலத் தேதி 6-6-84 அன்று காலை 11 மணிகும், (5) B ஷோபா தேவி, 4, பிரிட்ஜ்ரோடு, அடையாறு, சென்னை 20 (31-12-79க்கு முன்பும் 24-8-82 முதல் பிப்ரவரி 83-முடிய) ஏலத் தேதி 6-6-84 அன்று மதியம் 3 மணிக்கும், மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசுஅங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம் சந்த் ஜெயின், 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை 12ல் மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி ஏலம் போடுவார்.

---




PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN


---

## கிண்டிதொழிற்பேட்டை: திரு.வி.க. பெயர் சூட்ட தமிழக அரசு ஆணை

சென்னை. மே 23- கிண்டியிலுள்ள தொழிற்பேட்டைக்கு திரு வி. க. தொழிற்பேட்டை' என பெயரிட தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

சென்னை கிண்டியிலுள்ள தொழிற்பேட்டைக்கு கிண்டி திரு வி க. தொழிற்பேட்டை என பெயரிட தமிழக அரசு ஆணை பிறப்பித்துள்ளது கிண்டி தொழிற்பேட்டை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் தொடங்கப் பட்டதாகும். இந்த தொழிற்போட்டைக்கு தமிழ்த்தென்றலும் இந்திய துணைக் கண்டத்தில் மெட்ராஸ் லேபர் யூனியன் என்ற முதல் தொழிற் சங்கத்தை வாடியாவுடன் சேர்ந்து நிறுவிய திரு.வி.க. வின் பெயரை சூட்ட தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது. திரு.வி.க.வின் தொண்டினை பாராட்டும் வகையிலும் முதல் தொழிற்சங்கம கண்டு தொழிலாளர் வர்க்கத்திற்கு திரு.வி க. பாடுபட்டதற்கும் அவரை போற்றி பெருமைப் படுத்தும் வகையில் கிண்டி தொழிற்பேட்டைக்கு திரு வி. க.பெயர் சூட்டப்படுகிறது,

இந்த தகவல் தமிழக அரசின் செய்தி குறிப்பு ஒன்றில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

தமிழகம் வந்த

## ஆந்திர அழகிகள் எங்கே? போலீஸ் வலைவீச்சு

சென்னை, மே. 23. ஆந்திராவில் செகந்தராபாத்தை சேர்ந்த இளம் பெண்கள் சுஜாதா (வயது 24) இம்பாலா (வயது 23) இருவரும் தோழிகள் இவர்கள் மதுரைக்குஒருதிருமணத்திற்கு வந்துவிட்டு ஆந்திரா போக சென்னை திரும்பினார்கள். அதன் பின் செகந்திராபாத்திற்கு போய்சேரவில்லை. இது குறித்து போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது. போலீசார் வலை விசி தேடி வருகிறார்கள்.

---

கிராமப்புற வேலைவாய்ப்பு

திட்டத்தின் கீழ்

## தஞ்சை மாவட்டத்தில் ஆதிதிராவிடர்களுக்கு 1200 வீடுகள்

தஞ்சாவூர், மே 23 கிராமப்புற தேசிய வேலைவாய்ப்பு திட்டத்தின் கீழ் தஞ்சை மாவட்டத்தில் ஆதிதிராவிடர்களுக்கு 1200க்கும் மேற்பட்ட வீடுகள் கட்டதிட்டமிடப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் சோசம்மா கூறியதாவது:-

ஒழுங்கிணைந்தகிராமப்புற அபிவிருத்தி திட்டத்தின் கீழ் கறவை மாடுகள் வாங்க உதவி அளிக்கப் படுகிறது.

இதற்கு மத்திய அரசு ரூபாய் ஒரு லட்சம் அனுமதித்துள்ளது.

34பிளாக்குகளில் இந்த உதவிகள் வழங்கப்படும்.

கிராமப்புற தேசிய வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் 1984—85-ம் ஆண்டில் 400 புதிய வேலைகள் மேற்கொள்ளப்பட உள்ளது.

ஆதிதிராவிடர்களுக்கு 1200க்கும் மேற்பட்ட வீடுகள் கட்டுவதும் இதில் ஒன்றாகும்.

.44.4லட்சம்செலவில் 740 குருப் வீடுகள் தாழ்த்தப்பட்ட மலைவாழ் மக்களுக்கும் கட்டப்படும்.

இவ்வாறு மாவட்ட ஆட்சித்தலைவர் சோசம்மா கூறினார்.

---

## அமெரிக்க விமானம் நொறுங்கி விழுந்தது

சியோல், மே 23— அமெரிக்க விமானப் படைக்கு சொந்தமான உளவு பார்க்கும் விமானம் ஒன்று ஓசான் விமானதளத்திலிருந்து புறப்பட்ட சிறிது நேரத்திற்கு எல்லாம் நொறுங்கி விழுந்தது.

---

ஜூன் மாத மத்தியில்

காஷ்மீர் கன்னியாகுமரி

## எக்ஸ்பிரஸ் ரயில் போக்குவரத்து துவக்கம்

அமேதி, மே 23- ஜூன் மாத மத்தியில் இருந்து காஷ்மீர் - கன்னியாகுமரி எக்ஸ்பிரஸ் ரயில ஓடத் துவங்கும் என்று மத்திய ரயில்வே அமைச்சர் கானி கான் சௌத்திரி தெரிவித்துள்ளார்.

இதேபோல் விரைவில் நீண்ட தூர ரயில் போக்குவரத்துகள் துவக்கப்படும் ரயில் நிலையங்களில் பொது மக்களுக்கு வேண்டிய நவீன வசதிகள் செய்து தரப்படும் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

---

## கழக தோழர் மறைவு

சென்னை 10-வது வட்டத்தைச்சேர்ந்த எம். ஜி. ஆர். நற்பணி மன்றத்தைச் சேர்ந்த தங்கவேல் காலமானார்.

இன்று (23-ந் தேதி) மாலை 5 மணியளவில் ராயபுரம் காசிமேடு மயானத்தில் அடக்கசடங்குகள் நடைபெறுகிறது.

---

குடிநீர் வசதி அளிக்க

## கோவையில் 20 நகரங்களுக்கு ரூ. 41 கோடி திட்டம்

கோவை, மே 23- கோவையில் 20 நகரங்களுக்கும் 416 குடியிருப்புகளுக்கும் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க ரூ 41 கோடியில திட்டம் தீட்டப்பட்டுள்ளது.

கோவை மாவட்ட ஆட்சித் தலைவர் என். ஆதிமூலம் மாவட்ட அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்தில் கூறியதாவது:-

கோவை பகுதியில் தொண்டமுத்தூர், பேரூர் பெங்களூர், சுல்தான் பேட்டை ஆகியபிளாக்கில் உள்ள மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடி நீர் வழங்க ஒரு திட்டம் திட்டப் பட்டுள்ளது.

ரூ 41 கோடியில் இதற்காக ஒரு திட்டம் தீட்டப்பட்டுள்ளது உலக வங்கி உதவியுடன் இந்த திட்டம் செயல்படுத்தப்படும்.

இந்த திட்டத்தின் மூலம் 20 நகரங்களும் 416 குடியிருப்புகளும் பயன்பெறும்.

ரூ 3.85 கோடியில் சூலேஸ்வரன்பட்டி மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க ஒரு திட்டம செயல்படுத்தப்படும்.

இவ்வாறு மாவட்ட ஆட்சித் தலைவர் கூறினார்.

---

ஐதராபாத்தில்

## மீண்டும் ஊரடங்கு

ஐதராபாத், மே. 23 ஐதராபாத்தில், கலவரம் நடந்த பகுதிகளில் இன்று காலை 2 மணி நேரத்திற்கு ஊரடங்கு உத்தரவு வாபஸ் பெறப் பட்டது.

பின்னர், 21 காவல் நிலையங்களுக்குஉட்பட்ட பகுதிகளில் மீண்டும் ஊரடங்கு உத்தரவு அமுலாக்கப்பட்டது.

இதற்கிடையில் ஆசிப் நகர் தொகுதிக்கான வாக்குகள் எண்ணும் பணி இன்று காலை தொடங்கியது.